10

# நியாயங்கள்

அலாரம் கடிகாரத்தின் ஒலி, குளிருக்கு அடக்கமாகக் கம்பளிக் குள் முடங்கிக் கொண்டிருந்த அவனுடைய செவிகளில் மிக மெல்லிய தாகக் கேட்டது. அவன் சட்டென்று உணர்வுகள் விழிப்புற்று முழங் காலுக்கு இடையே இருந்த கதகதப்பில் சௌக்கியமாகப் படுத்திருந்த கையை வெளியில் எடுத்து அதை நிறுத்த முயல்கையில் ஓசை நின்றது. வெகு நேரமாக அடித்திருக்க வேண்டும்.

கோபாலி கண்களைச் சுழற்றிப் பார்த்தான். வெளியே இன்னும் இருட்டாக இருந்தது. கடிகாரம் தப்பாக மணி அடித்திருக்கிறது என்று தோன்றிற்று. இனிமேல் இந்தக் கடிகாரத்துக்கு அலாரம் வைத்து விட்டுப் படுத்துக் கொள்ளக் கூடாது என்று அவன் தீர்மானித்துக் கொண்டு மறுபடியும் கையை முழங்காலின் கதகதப்புக்குள் நுழைக்கையில்,

''எழுந்திருடா கோபாலி, நேரமாச்சு'' என்று மாமாவின் குரல் கேட்டது. அவன் சற்று நேரம் பதில் சொல்லக்கூட சோம்பிக் கொண்டு கிடந்தான்.

''மணி ஆறாகப் போறது. தினமும் அலாரத்தை வெச்சுக் கறதிலே குறைச்சலில்லே. அடிச்சோண்ணே ஒரு நாளாவது எழுந் திண்டிருக்கியோ?''

''இதோ எழுந்திருக்கறேன் மாமா'', உடம்பு அடித்துப் போட்ட மாதிரி இருந்தது. கால்கள் இரண்டையும் நகர்த்தக்கூட முடியாமல் தூணைப்போல் கனத்தன. அவன் மிகப் பிரயாசைப்பட்டு எழுந்து சுவரில் சாய்மானமாக உட்கார்ந்து கொண்டான். குளிர் நடுக்கி எடுத்தது. மண்டை கனத்துக் கொண்டு விண் விண் என்று வலித்துக் கொண்டிருந்தது. நேற்று இரவு போட்டதன் விளைவு. மாமாவுக்கு சூட்சுமம் அதிகம். முகத்தைப் பார்த்தே தெரிந்து கொண்டு விடுவார்.

கோபாலி இருட்டில் துழாவி பக்கத்தில் மேஜை மேலிருந்த சிகரெட் பாக்கெட்டைத் திறந்து சிகரெட் பற்ற வைத்துக் கொண்டான். ஒரு இழுப்பு இழுத்துக் கொண்டதும் உடம்பு சுற்றுச் சூடு பிடிக்கிற மாதிரி இருந்தது.

அப்பா, என்ன குளிர் குளிருகிறது இங்கே? நாற்பது வருஷமாய் டில்லியில் வாசம் செய்தாலும் ஒவ்வொரு தடவையும் இந்தக் குளிர் காலம் வரும்போது அது தாங்க முடியாததாகத் தோன்றிற்று. அதுவும் இந்த இரண்டு வருஷங்களாய்த் தாங்கவே முடியவில்லை.

மறுபடி புகையை ஒரு இழுப்பு இழுத்துக் கொள்வதற்குள் இருமல் ஆரம்பித்து விட்டது. ஐந்து நிமிஷத்திற்கு விடாமல் தொடர்ந்தது. அவன் மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டான். கண்களில் நீர் நிறைந்தது.

''ஆச்சு ஆரம்பிச்சாச்சு இருமல்.'' மாமியின் குரல் அலுப்போடு கேட்டது.

''டாக்டரைப் போய் பாருடான்னு நானும் மூணு மாஸமா சொல்லிண்டிருக்கேன்.''

''டாக்டர்கிட்ட போனா அவன் மட்டும் என்ன சொல்லப் போறான்? குடிக்காதே புகைக்காதேங்கப் போறான். உங்க மருமான் கேக்கப் போறானா?''

''சித்த வாயை மூடிண்டிரு கமலம்.''

''எனக்கு செய்யத்தான் பாத்தியதை. சொல்ல பாத்தியதை இல்லே.''

இருமல் சற்று நின்றது. கோபாலி கண்ணை மூடிக்கொண்டு இரண்டு நிமிஷங்கள் தலையணையில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந் தான். பிறகு சட்டென்று எழுந்தான். சால்வையை மேலே போர்த்திக் கொண்டு அந்தத் திறந்த வராண்டாவின் மூலையில் இருந்த வாஷ்பேஸினுக்குச் சென்று பல் தேய்க்கையில் குளிர் எலும்புக்குள் நுழைந்து நடுக்கிற்று. அவன் அங்கு நிற்க முடியாமல் பக்கத்தில் இருந்த குளியலறைக்குள் நுழைந்தான். பாய்லரில் சூடான வெந்நீர் இருந்தது. விறைத்துப்போன விரல்களை அடுப்பின் மேல் சற்று நேரம் பிடித்துக் கொண்டிருந்து விட்டு பல்லைத் தேய்த்து அவசரமாக முகத்தை வெந்நீரில் கழுவிக் கொண்டதும் மண்டையின் கனம் சற்றுக் குறைந்தாற்போல் இருந்தது.

அவன் தன் அறைக்கு விரைந்து சென்று அங்கு சுவரில் தொங்கிக் கொண்டிருந்த கண்ணாடியில் முகத்தைப் பார்த்துத் தலையைச் சீவிக் கொண்டான். கண்ணாடியின் குறுக்கே ஒரு விரிசல் விழுந்திருந்தது. அதில் முகம் இரண்டு பாதியாக பயங்கரமாகத் தெரிந்தது. வெகுநேரம் தன் பிம்பத்தைப் பார்க்கத் தென்பு இல்லாத வன் மாதிரி அவன் தனது நரைத்த மயிரை அவசரமாக சீவிக் கொண்டு சமையலறைக்குச் சென்று அடுப்படியில் மாமி வைத்திருந்த காப்பியைக் குடித்தான். மாமி கீழே மணையில் உட்கார்ந்து காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தாள். மாமா நடத்துவது ஹோட்டலானாலும் அவருக்கு வீட்டுச் சாப்பாடு.

மாமி தலை நிமிர்ந்து அவனைப் பார்க்கவேயில்லை. அவன் காப்பி டம்ளரைக் கழுவி வைத்துவிட்டுத் தலையைக் குனிந்தபடி ஹோட்டலுக்குக் கிளம்பினான். மாமா ஏற்கனவே கிளம்பிப் போயிருந்தார். அவன் ஹோட்டலின் பின் பக்கக் கதவு வழியாக

சமையல் அறைக்குச் சென்றான். உள்ளே நுழைந்ததுமே அந்தக் கதகதப்பு அணைக்கிற மாதிரி இருந்தது. அவன் ஆர்வத்துடன் கணகண என்று எரிந்து கொண்டிருந்த கொய்லா அடுப்பின் மேல் கைகளுக்குச் சூடு காண்பித்தான்.

இட்லிப் பானையில் இட்லிமாவு வார்த்த குழிகளை வைத்தபடி ராமன் நாயர் குரல் கொடுத்தான்.

''தணுப்புக்கு சுகமா அடுப்புக்கிட்டே நின்னா போறாது. தோசைக்கல் காயறது பாரு!''

கோபாலி தோசைக்கல்லிடம் நகர்ந்தான். தோசை மாவு சுர்ரென்று கல்லில் விழுந்தது.

''கஸ்டமரெல்லாம் வர ஆரம்பிச்சாச்சா?''

''ஓ! எத்தற நாழியாச்சு!''

இந்தக் குளிரில் இவர்கள் எப்படித்தான் இத்தனை சீக்கிரம் வருகிறார்களோ என்றிருந்தது அவனுக்கு. இல்லை நமக்குத்தான் அதிகமாகக் குளிருகிறதா?

ராமன் நாயர் டப்டப் என்ற ஓசையுடன் இட்லிகளை பெரிய கங்காளத்தில் கொட்டினான்.

''கோபாலி!''

''உம்?''

''நீ இந்த டில்லிக்கு வந்து நாற்பது வருஷமாச்சா?''

''ஆச்சே! பத்து வயசுலே இங்கே வந்தேன் - அம்பதாகப் போறதே!''

''அதான் தலைமயிரே சொல்றதே வயசை. இல்லை, ஊருக்கு ரெண்டு வருஷத்துக்கு ஒருக்கா போயிண்டிருக்கியே ஏன் ஒரு தடவை

கூட கல்யாணத்தைப் பண்ணிண்டு வரல்லே? எந்த குட்டியும் கண்ணுக்குப் படலியா?''

கோபாலி பேசாமல் இருந்தான் தோசையில் பார்வையை நிறுத்தியபடி.

''அதுக்கெல்லாம் ஏது நேரமும் காலமும்?''

ஞாபகத்தை உலுக்கிக் கொண்டு கோடி வீட்டு ராதையின் உருவம் மனத்திரையில் நின்றது.

''உஹூம்.''

''இல்லேன்னா டில்லியிலேயே யாராவது ஒரு ஹிந்திப் பொண்ணைப் பார்க்கறது.''

கோபாலி சட்டென்று ராமன் நாயரைப் பார்த்துச் சிரித்தான்.

''ஏன் உனக்கு இவ்வளவு கவலை?''

''ஒண்ணுமில்லே. உனக்கு இப்போ உடம்பு சரியில்லே ஓயாமெ இருமறே. ஒரு பெண்டாட்டின்னு இருந்தா பார்த்துப்பா ளோல்லியோ?''

கோபாலி பதில் சொல்லாமல் தோசையை மடித்து மடித்து அங்கு வந்து நின்றவரிடம் கொடுப்பதில் முனைந்தான்.

''அதுக்கென்ன பண்றது? எல்லாத்துக்கும் அருகதை வேண்டாமா?''

''பெண்டாட்டின்னு இருந்தா நன்னாகட்டி வெச்சிருப்பாள்; கன்ட்ரோல் இருந்திருக்கும்!''

''உஷ் ராமன் ப்ளீஸ்''

''சரியப்பா - எனக்கென்ன?'' எதைப்பற்றிய சிந்தனைக்கும் இடம் கொடுக்கக் கூடாது என்கிற தீர்மானத்துடன் கோபாலி

பரபரவென்று காரியத்தில் ஈடுபட்டான். இருந்தும் மனசு ஒரேயடியாய் ஒரு சண்டித்தனத்தோடு சக்கிர வட்டம் ஆடிற்று.

கல்யாணம் செய்து கொள்வதென்னமோ ரொம்பச் சுலபமான காரியம் மாதிரி இந்த ராமன் பேசுவதைக் கேட்கையில் அவனுக்கு வேடிக்கையாக இருக்கும். ராமன் ஒண்டிக்கட்டை. வீட்டிலிருந்து சண்டை போட்டுக் கொண்டு ஓடி வந்தவன். இங்கே காய்ந்த வயிறும் காலிப்பையுமாக வேலைக்குச் சேர்ந்தவன். கையில் இரண்டு காசு சேர்ந்து உடம்பிலும் தினவு ஏற்பட்டதும் கண்ணில்பட்ட, ஒரு பஞ்சாபிப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டவன். அந்த மாதிரியெல்லாம் ஒரு நாடோடி வாழ்க்கை நமக்கு எப்படி சாத்தியம்?

மணி ஒன்பதரை. காலை அவசரத்தின் மும்முரம் குறைந்திருந்தது. வேலை முடிந்த பிறகு அவர்கள் எல்லோரும் டீயைப் போட்டுக் குடித்தார்கள். அவன் ஒரே ஒரு இட்லியை எடுத்துக் கொண்டு காப்பியைக் குடித்துவிட்டு குளிப்பதற்காகச் சென்றான்.

மாமி பதினெட்டு முழப் புடவையைக் கொடியில் உலர்த்திக் கொண்டிருந்தாள்.

''ஊரிலிருந்து கடிதாசி வந்திருக்கு கோபால்.''

''எங்கே?''

''கடியாரத்துக்கடியிலே வெச்சிருக்கேன்.''

குண்டுகுண்டாக இருந்தது கையெழுத்து. அப்பாவின் பெயரில் கடைசித் தம்பி எழுதியிருந்தான்.

''சந்தானத்தின் கல்யாணம் நிச்சயமாகியிருக்கு. நம்ம செலவுக்கு அவா இரண்டாயிரம் தரா. வீட்டுக்கு மூத்தவன் நீ முன்னாலேயே வந்திருந்து மத்த ஏற்பாடுகளைப் பார்த்துக்கணும் எனக்குத் தள்ளல.''

அப்பாவுக்கு 80 வயது. கோபாலிக்குச் சட்டென்று மனசில் ஒரு ஆயாசம் ஏற்பட்டது. அப்பாவின் 80 வயசுக்கும் தன்னுடைய 50 வயசுக்கும் அதிக வித்தியாசம் இல்லை என்று தோன்றிற்று. ஆனால் அப்பாவை மாதிரி தான் யாரிடமும் பொறுப்பை ஒப்படைக்க முடியாது என்கிற எண்ணம் மனசை அரித்தது. ஊரும் அதன் வாய்க்காலும் வெய்யிலும் ஞாபகத்திற்கு வந்தவுடன் டில்லிக் குளிரை இன்னும் சிறிது நேரம்கூட தாங்க முடியாது என்கிற ஒரு பிரமை சட்டென்று உணர்வுகளை ஆக்கிரமித்தது.

''என்னடா கடுதாசி வந்திருக்காமே?''

மாமா பேப்பரைக் கையில் பிடித்தபடியே கேட்டார்.

''ஆமாம் சந்தானத்துக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்காம், வர 25-ம் தேதிக்கு.''

''இன்னும் இருபது நாள் தானே இருக்கு? அப்ப இன்னிக்கே டிக்கெட்டுக்குப் போய் பாரு. குளிருக்கு நீ இங்கே இல்லாமலிருப்பது நல்லதுதான்.

''சரி.''

மறு நாளைக்கே புறப்படுவதற்கு டிக்கெட் கிடைத்து விட்டது. ...வன் ஜன்பத்துக்குச் சென்று தங்கைகள், தம்பிகளுக்காகச் சின்னச் ...ா சாமான்கள் வாங்கிக் கொண்டான். வீட்டிற்குச் சென்று ...ர்களை பெட்டியில் வைக்கும்போது மாமா உள்ளே வந்து ...படி நிற்பது தெரிந்தது.

''கோபாலி உங்கிட்டே ஒரு விஷயம் சொல்லணும்.''

''சொல்லுங்கோ!''

''இந்தத் தடவை நீ ஊரிலேயே தங்கிடறதுதான் தேவலை....''

கோபாலி சட்டென்று நிமிர்ந்து பார்த்தான்.

மாமா சொல்லத் தயங்குகிற மாதிரி தலையைக் குனிந்து கொண்டார்.

''யூனியன் காராள்ளாம் ஆட்சேபணை பண்றா, உறவுக் காரனை வேலைக்கு வெச்சுண்டிருக்கான்னு. உனக்கு உடம்பும் சரியில்லே. நீ படுத்திண்டியானா கவனிக்கிறதுக்கு இங்கே யாருக்கும் சக்தியில்லே, மாமிக்கும் வயசாரது பாரு...''

கோபாலி எழுந்தான். இங்கேயே இருக்கட்டும் என்று நினைத்து அலமாரியில் வைத்திருந்த துணிமணிகளை எடுத்து பெட்டிக்குள் திணித்தான்.

''சரி மாமா.''

''தமிழ் நாட்டுக்குப் போனா உன் பழக்கங்களும் மாறும்.''

கோபாலி பதில் பேசவில்லை.

''நான் சொல்றதை நீ தப்பா எடுத்துக்கக் கூடாது கோபாலி.''

''உங்களுக்கு சொல்றதுக்கு பாத்யதை இருக்கே?''

''ஆனா நான் சொன்னதையெல்லாம் எங்கே கேட்ட இதுவரை...?''

மாமா எழுந்து வெளியே போனார். பெட்டியை இழுத்து மூடுகையில் வாழ்வில் முக்கால் பங்கு முடிந்த மாதிரி ஒரு பிரமை ஏற்பட்டது. அன்றைக்கு மாலையில் கடைத் தெருவிற்குப் போக வேண்டும் என்று சொல்லிவிட்டு ஹோட்டலுக்குப் போகாமல் வெளியே கிளம்பினான்.

மாமாவுக்கு நாம் சுமையாகிப் போனோம் என்கிற எண்ணம் மனசை உறுத்திற்று. பத்து வயசில் ஊரில் பள்ளிக் கூடத்துக்குப் போகாமல் புழுதி மண்ணில் விளையாடிக் கொண்டிருந்தவனை 'என்னோடு டில்லிக்கு வரயாடா?' என்று கேட்டதும் சரி என்று அவர்

கையைப் பிடித்துக் கொண்டு கிளம்பியது ஞாபகத்திற்கு வந்தது. டில்லியின் காட்சிகளைக் கண்டு தான் பட்ட ஆச்சரியமும் மாமியின் திடீர் திடீர் கோபத்துக்கும் டில்லியின் குளிருக்கும், வெய்யிலுக்கும் தன் மனசையும் சரீரத்தையும் பழக்குவதற்குள் தான் திணறிய திணறலும் ஞாபகத்திற்கு வந்தது. முதலில் சின்னச் சின்ன எடுபிடி வேலைகளில் ஆரம்பித்து பிறகு இட்லி வார்க்கவும், தோசை வார்க்கவும் பழகி கோபாலி மசாலா தோசை எக்ஸ்பர்ட் என்று பெயர் வாங்கி அந்த ஹோட்டலுக்கு வருகிறவர்கள் எல்லாம் கோபாலியின் தோசைக்காகவே வருகிற அளவுக்கு ஸ்தாபிதமாகி -

ஓ இப்பொழுது மாமாவுக்கு சுமையாகிப் போனோம் என்று மறுபடியும் மனசை உறுத்திற்று.

சட்டென்று அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டான். மாமா சொல்வதில் ஏதும் தவறில்லை என்று தனக்குள் சொல்லிக் கொண் டான். கால்கள் தாமாக பார்க்குக்குச் சென்றன. இன்றைக்குத்தான் கடைசி. தமிழ் நாட்டுக்குப் போனால் இதற்கெல்லாம் வாய்ப்பில்லை என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

வீட்டுக்குள் நுழையும்போது மாமி புடவைத் தலைப்பால் மூக்கையும், வாயையும் பொத்திக்கொண்டு உள்ளே போவதை அவன் கவனிக்காத மாதிரி தன் அறைக்குச் சென்றான்.

மறு நாள் காலை தமிழ்நாடு எக்ஸ்பிரசில் உட்கார்ந்து பயணத்தை ஆரம்பிக்கையில்,

''அடிக்கடி கடுதாசி போடுடா கோபாலி'' என்று தழுதழுத்த மாமாவின் குரல் ஞாபத்துக்கு வந்தது. ஹோட்டலின் மற்ற ஊழியர்கள் கேரள, தமிழ், ஹிந்தி ஊழியர்கள் கையை அழுத்தி முதுகைத் தட்டி கழுத்தை அணைத்துக் கொடுத்த விடைகள் உபதேசங்கள் திரும்பத் திரும்ப மனசில் நின்றது.

''உடம்பைப் பார்த்துக்கோ. இங்கே ஏற்படுத்திண்ட பழக்கத்தை யெல்லாம் விட்டுடு...''

இப்போது நினைத்தால் திகைப்பாக இருந்தது.

அது சாத்தியமா?

ஊரில் நமக்கு வேர்கள் பிடிக்குமா? எனக்கு எங்குமே வேர்கள் இல்லை என்று நினைக்கையில் மனசில் ஒரு சோகம் நிறைந்தது. ஊரை மறந்து, மண்ணை மறந்து நாற்பது வருஷமாக டில்லிக் காரனாகவே, உடையிலும், சிந்தனையிலும் ஆகியும் டில்லியிலும் வேர்கள் இல்லை. திருமணம், பந்தம் என்று ஏற்பட்டிருந்தால் வேர்கள் எங்கேயானும் படர்ந்திருக்குமோ?

''ஒரு குட்டியும் கண்ணிலே படல்லியா?''

பளிச் பளிச்சென்று அந்தக் கேள்வியும் அதற்கு விடை மாதிரி அந்த முகமும் மனசில் சுழன்றது.

ஒரு முறை ஊருக்குப் போயிருந்தபோது அந்தப் பெண் ராதை கண்ணில் பட்டாள். இதுவரை எந்தப் பஞ்சாபி அழகியும் மனசில் ஏற்படுத்தாத கிளர்ச்சியை ஏற்படுத்தினாள். அவளைத் திருமணம் செய்து கொள்ளத்தன் விருப்பத்தைத் தெரிவித்தபோது ''4 தம்பி களைப் படிக்க வெச்சு ஆறு தங்கைகளுக்கு கல்யாணம் செய்து கொடுக்க வேண்டிய பொறுப்பிலிருக்கிறவனுக்கு என் பெண்ணைக் கொடுக்க மாட்டேன் என்று ராதையின் அப்பா தெரிவித்தபோது மனசில் ஒரு விவரிக்க முடியாத ஆத்திரம் ஏற்பட்டது. அப்பாவின் மேல், வாயை மூடிக்கொண்டு பதினாறு குழந்தைகளைப் பெற்று கடைசி குழந்தை இரண்டு மாசமாயிருக்கும்போது செத்துப் போன அம்மாவின் மேல், ஊரின் மேல், ராதையின் மேல், மாமாவின் மேல், மாமியின் மேல்...

எத்தகைய ராட்சஸ ஆத்திரம் எழுந்தது மனசில்! எல்லாரையும் பஸ்பமாக்கிவிட வேண்டும் என்கிற ஆத்திரம்! மனசிலிருப்பதை வெளியில் காட்ட முடியாத ஆத்திரம்! இப்பொழுது நினைக்கையில் கீறல் விழுந்த கண்ணாடியில் நரைத்துப் போன தலையைப் பார்த்துக்

கொள்கையில் அந்த ஆத்திரம் மிகப் பைத்தியக் காரத்தனமாகத் தோன்றிற்று. ஆனால் பதினைந்து வருஷங்களுக்கு முன்பு அது மிக சத்தியமானதாக - தவிர்க்க முடியாததாக இருந்தது. அந்த ஆத்திரத்துக்கெல்லாம் வடிகால்களை தேடிப் போனது என் குற்ற மில்லை என்று அவன் தனக்குள் பேசிக் கொண்டான்.

ஊர் வந்து சேர்ந்தாகி விட்டது. அந்த வெய்யிலைப் பார்க்கையில் டில்லியில் இப்பொழுது குளிர்காலம் என்று நினைத்துப் பார்க்கவே ஆச்சரியமாக இருந்தது.

''தமிழ் நாட்டுக்குப் போனாலே உன் பழக்கங்கள் மாறும்.''

இந்தத் தெருக்களையும் அதன் சுத்தத்தையும் பார்க்கையில் அது சாத்தியம்தான் என்று தோன்றிற்று.

''யார்ரா அது கோபாலியா?''

''ஆமாம்.''

''என்ன இது பிரேதம் மாதிரி இளைச்சிருக்கே? உடம்புக்கு என்ன?''

''ஒண்ணுமில்லையே?''

''பாவம் டில்லியிலேயிருந்தாலும் இங்கேயிருக்கிற குடும்ப பாரத்தையெல்லாம் சுமக்கிறே!''

வழி நெடுக வீடு சேருகிறவரை ஒவ்வொரு திண்ணையி லிருந்தும் விசாரிப்புகள், அனுதாபங்கள்.

அந்த வெய்யிலைப் போலவே அவர்கள் பேச்சு இதமாக இருந்தது.

இவர்களுக்குத் தெரியும். நாம் வீட்டுக்காகச் செய்திருப்பது. நமக்காக எதையுமே வைத்துக் கொள்ளாதது. ஒரு சராசரி மனிதன் அனுபவிக்கும் எந்த சுகத்தையுமே அனுபவிக்காதது. இந்தக்

காரணங்களால்தான் சில பலவீனங்களுக்கு ஆளானேன் என்றால் அவை நியாயமானவை.... புரிந்து கொள்ள வேண்டியவை....

தூரத்திலேயே அப்பா வீட்டு வாசலில் நிற்பது தெரிந்தது. அந்த வற்றிய கூனல் விழுந்த உடம்பைப் பார்க்கையில் பகீர் என்றது.

''அண்ணா வந்தாச்சு, அண்ணா வந்தாச்சு!''

வாசலில் ஒரு கூட்டமே - அவனுடன் கூடப்பிறந்த கூட்டம் நின்றிருந்தது.

''வா கோபாலி - உடம்பு எப்படியிருக்கு?''

''இருக்கேன்.''

''நன்னாவேல்லியே பார்க்க!''

என் உடம்பு இப்படி இருக்கிறதுக்குக் காரணம் இந்த கூட்டம் தான் என்கிற பார்வை தன்னைச் சுற்றிலும் பார்த்தான். அவனுடைய தம்பி தங்கைகள் எல்லாமே தளதளவென்று இருக்கிற மாதிரி அவனுக்குப் பட்டது. யாருடையதும் வீணாகிப் போகவில்லை நம்முடையது மாதிரி... .

ஒரு தங்கை நீட்டிய காப்பியை அவன் குடித்தான். காப்பி குடித்ததும் சிகரெட் பிடித்து வழக்கமாகிப் போன கையும் வாயும் துறுதுறுத்தது. புழக்கடை வெகு தூரத்தில் இருந்தது. அவன் எழுந்தான்.

ஊருக்கு வெளியே நாட்டு சரக்குக் கிடைக்கும். சாயங்கால மாகப் போய் ருசி பார்த்து வாய்க்காலில் முங்கியெழுந்து விபூதிப் பட்டையை நெற்றியில் இட்டுக் கொண்டு விட்டால் யாருக்குத் தெரியப்போகிறது?

புழக்கடைக்குப் போக நீளமான, லேசாக இருண்ட அந்த ரேழியைக் கடக்க அப்பாவும் கூடவே வந்தார், வழி காட்டுகிற மாதிரி. அவன் சட்டென்று நின்றான்.

யாரது? கண்களின் பிரமையா என்று ஒரு விநாடி திகைத்தான். ஆதிசங்கரர் மாதிரி அருள் வடிவமாய் தேஜஸ்ஸாய் - இது என்ன பிரமை?

''என்ன நின்னுட்டே?''

அவனுக்கு வாய் குழறிற்று.

''யாரது அங்கே உக்கார்ந்திருக்கிறது?'' அப்பா கூர்ந்து பார்த்தார்.

''அதுவா நம்ம மீனு, தெரியல்லியா?''

அவன் அதிர்ந்து போனான். அவனுடைய விதவைத் தங்கை - கல்யாணமாகி அடுத்த மாதம் வீட்டுக்கு வந்து சேர்ந்தவள். ஆனால் எப்பொழுதிலிருந்து இந்தக் கோலம்?

''திடீர்னு நாலு மாசம் முந்தி வேஷம் பண்ணிண்டாச்சு.''

''ஆதி சங்கரர் மாதிரி பிரமை ஏற்பட்டது.''

''அவரேதான் இவள்னு நீ சொன்னாலும் நா நம்புவேன் கோபாலி.''

''அப்படி ஒரு தபஸ்வினி இவளும். இவ மாத்திரம் இல்லேன்னா இந்தக் குடும்பம் நாறிப் போயிருக்கும்தான். இப்படி ஆயிட்டமேன்னு ஒரு நா ஒரு ஆங்காரத்தைக் காட்டினதில்லே!''

அவர்கள் பேச்சரவத்தைக் கேட்டு மீனு எழுந்து வந்தாள்.

''வாங்கோ அண்ணா.''

''என்ன மீனு இது வேஷம்?''

"வேஷமா? வேஷத்தையெல்லாம் அவுத்து வெச்சுட்டேனே!"

ஒரு விநாடி அவன் தாக்குண்டவன் போல் நின்றான். என்ன புன்னகை அது? அருள் சுரக்கும் புன்னகை - ஞானப் புன்னகை - இந்த வீட்டுச் செலவுக்காக நீ அனுப்பின பணத்தைவிட இந்தக் கூட்டத்திலே சிரிச்சுண்டு நிக்கற நான்தான் ஒசத்தி என்கிற புன்னகை.

அந்தப் புன்னகையில் அவன் பஸ்பமாகிப் போகிற மாதிரி அவனுள் ஒரு பிரமையேற்பட்டது.

அவன் எதுவும் சொல்லாமல் மறுபடி கூடத்துப் பக்கம் திரும்பி நடந்தான்.

"புழக்கடை பக்கம் போணும்னு சொன்னியே?"

"இல்லே போகல்லே - அதுக்கு இப்போ அவசியமில்லே..."

கல்கி - 1980

